உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீவேணுவன லிங்கோற்பவம்.

திருநெல்வேலியில் தக்ஷிணகங்கை என்னும்

தாம்பிரபர்ணிக்கரையில் தாபித்திருக்கிற

அன்னசத்திரபதிகள் மூவருள் ஒருவராகிய

கண்டநல்லூர்

நா. பெ. ராம. இலட்சுமணச்செட்டியார்,

வேண்டுகோளின்படி

ஸ்ரீமத் ஆறுமுக நாவலரவர்கள் கிருபாநோக்கம்

பெற்ற

யாழ்ப்பாணத்து வட்டுக்கோட்டை

ஆ. அம்பலவாணபிள்ளை செய்தது.

இஃது

திருநெல்வேலி

ச. சுப்பிரமணியபிள்ளையால்

தமது

சிந்தாமணியந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

பார்த்திவஹு ஆனிமீ

1885 JUNE - JULY.

உ

சிவமயம்.

# முகவுரை.

இங்கே பிரகடனஞ்செய்யப்பட்ட "ஸ்ரீ வேணுவனலிங்கோற்பவம்" என்னும் இப்பிரபந்தம் சிலகாலத்திற்கு முன்னே திருநெல்வேலியிலே திருவருள்பெற்று விளங்கிய ஸ்ரீ நெல்லையப்பபிள்ளையவர்கள் தமிழிலே மொழிபெயர்த்துச்செய்த திருநெல்வேலித்தலபுராணத்தை முதலாகக்கொண்டு, அதிலுள்ள அதிமுக்கியமாகிய சிலகதைகளைப் பலரும் தெரிந்துகொள்ள விரும்பிக் கடினமாகிய சந்திவிகாரங்களின்றியும் இன்றியமையாத சிலவடமொழிகள் புணர்த்தியும் கத்தியரூபமாகச் செய்யப்பட்டிருக்கின்றது.

இது அத்தலபுராணத்திலே பரந்து கிடப்பனவாகிய சிலபொருள்களை எளிதிற் புலப்படவேண்டிச் சுருக்கியும், அதிகாரம் அவாய்நிலை முதலியவற்றாற் குறிப்பிற்பெறற்பாலனவாய்ச் சுருங்கிக் கிடப்பனவாகிய சிலபொருள்களைப் பலர்க்கும் புலப்படவேண்டி விரித்தும் புதுக்கி அமைக்கப்பட்டது.

அதனாலே அத்தலபுராணத்தை வாசித்து பொருள்விளங்கச் சத்தியில்லாதவர்களும், அஃதிருந்தும் சாவகாசமில்லாதவர்களுமாகிய ஆண் பெண் என்னும் இருபாலாரும் இப்பிரபந்தத்தை வாசித்தும் கேட்டும் வருவார்களாயின் இதன்கண்ணுள்ள இந்தக்கதைகள் நன்றாகப் புலப்படுவனவாகும்.

ஆதலினாலே சைவசமயிகள் யாவரும் இந்தப்பிரபந்தத்தை வாங்கிச் சிரத்தையோடும் நியமத்தோடும் பலமுறைவாசித்தும் கேட்டுமே இதிலே சொல்லப்பட்ட கதைகளைத்தெளிந்து சர்வாபீஷ்டவரதராகிய ஸ்ரீ வேணுவனநாதர் திருவடிக்கண்ணே மறவாத அன்புசெய்து வழிபட்டு உய்யக்கடவர்கள்.

அத்தலபுராணகதைகளுள் ஒன்றையாயினும் பலவற்றையாயினும் வாசிப்போரும், பொருள்சொல்வோரும், கேட்போரும், பிரகடனஞ்செய்வோரும் அதற்குப் பொருள் உபகரிப்போரும் தமது கவலைகள்நீங்கி இம்மையிலே இஷ்டசித்திகளை அடைந்து, மறுமையிலே சிவகதி சேருதற்குரியராவர்கள் என்று அப்புராணத்திலே சொல்லப்பட்டிருக்கின்றது.

பார்த்திவஹு ஆனிமீ.

இதனைச் சிவபெருமான் தமது திருவுளத்தடைத்துத் தம்மை யாவரும் எளிதில் தரிசித்து வழிபட்டு உய்யும்பொருட்டுப் பெருங்கருணையினாலே பூலோகத்திலே எண்ணில்லாத புண்ணியஸ்தலங்களைவைத்துத், தம்மினின்றும் வேறாகாத தமது திருவருளே தமக்குத் திருமேனியாகக் கொண்டு, தமது அருட்சத்தியும் உலகமாதாவுமாகிய உமாதேவியாரோடும் திருக்குமாரர்களோடும் அத்தலங்களிலே கணங்கள்சூழக் கோயில்கொண்டு கொலுவீற்றிருந்தருளுவர். இவ்வியல்பினவாகிய புண்ணியஸ்தலங்களுள்ளே, சிவமாந்தன்மைப் பெருவாழ்வுடைய சைவசமயாசாரியர்கள் நால்வராலும் அருளிச்செய்யப்பட்ட தமிழ்வேதமாகிய தேவார திருவாசகங்களைப் பெற்ற தலங்கள் சிவபெருமான் மிக்கபிரீதியோடு எழுந்தருளியிருக்கின்ற மிகமேலாகிய புண்ணியஸ்தலங்கள் என்று சொல்லப்படும். இம்மிகமேலாகிய புண்ணியஸ்தலங்கள் பலவற்றையும் தன்னகத்தேகொண்டது தக்ஷிணமாகிய தமிழ்நாடு. இதனாலே மற்றெந்தநாடுகளுள்ளும் சிறந்தது தமிழ்நாடு என்றுசொல்லப்படும். தமிழ்நாட்டிலும், சிவபெருமானும், உமாதேவியாரும், சுப்பிரமணியக்கடவுளும் அரசர்களாயிருந்து நெடுங்காலம் அரசுசெய்யப்பெற்றதும், சிவபெருமான் இரசித தாம்பிர சித்திரசபை என்னும் முத்திறத்துச் சபைகளிலும் ஆநந்தநிருத்தம் செய்யப்பெற்றதும், சிவபெருமான் சுப்பிரமணியக்கடவுள் அகஸ்தியர் தெய்வப்புலவர்கள் என்னுமிவர்கள் சங்கமிருந்து தமிழ் ஆராயப்பெற்றதும் இன்னோரன்ன பலசிறப்புக்களையுடையதுமாகிய "பாண்டிநாடே பழம்பதியாக" மிகச்சிறந்தது. இப்பாண்டிநாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவஸ்தலங்கள் பதினான்கு அவைகள் திருநெல்வேலி, திருவாலவாய், திருவாப்பனூர், திருப்பரங்குன்று, திருவேடகம், திருக்கொடுங்குன்றம், திருப்புத்தூர், திருப்புனவாயில், இராமேச்சரம், திருவாடானை, திருக்கானப்பேர், திருப்பூவணம், திருச்சுழியல், திருக்குற்றாலம் என்பனவாம்.

## உ. சிறப்பு.

இப்பதினான்கனுள் ஒன்றாகிய திருநெல்வேலி கிழக்கே செந்தமிழ்ப் பரமாசாரியராகிய ஆறுமுகக்கடவுள் திருவிளையாடல்செய்தமர்ந்திருக்கின்ற திருப்படைவீடாகிய திருச்செந்தூரையும், மேற்கே அவர் மாணாக்கரும் முனிவர்பெருமானுமாகிய அகஸ்தியமஹாதவர் உவந்திருக்கின்ற பொதியமலையை மருங்கிற்கொண்ட திருக்குற்றாலத்தையும், வடக்கே துவாதசாந்தபுரமாகிய திருவாலவாயையும், தெற்கே தேவசபைபொருந்திய சுசீந்திரத்தையும்



முக்கியஸ்தானங்களாகக் கொண்டு, பொதியமலையினின்றுந்தோன்றி உயிர்களுக்குச் சகலவளங்களையுந்தந்து வினைமாசு கழுவிச் சுத்தமாகிய முத்திசாதனோபாயத்தைப் பயக்கவல்ல திவ்விய தீர்த்தமாகிய பொருநைநதியாற் சூழப்பட்டு, உலகமாதாவாகிய ஸ்ரீ காந்திமதியம்மையாரோடு தன்னகத்துக் கொலுவீற்றிருக்கின்ற சிவபெருமானைச் "செல்வர்"என்னுந் திருநாமத்தோடு விளங்கக்கொண்டு, தன்னையடைந்தார்க்குச் சகல இஷ்ட சித்திகளையுந்தந்து, எல்லாத் தலங்களுள்ளும் உத்தமதலமென்று வழங்கப்பெறும். இத்திருநெல்வேலிதாருவனம், வேணுவனம், தக்ஷிணகயிலாயம், பிரமவிருத்தபுரம், பிரளயசித்து, திரிமூர்த்திபுரம், தபோமயம், கன்னிகாப்பு, விண்டுபுரம், சகலசித்தி முதலிய பலநாமங்களையுடையது. இது எல்லாப்பொருள்களும் அழிகின்ற பிரளயகாலத்தினும் தான் அழியாது நிலைபெற்றுவிளங்குகின்ற சிறப்பினையுடையது. இங்கே அகிலகாரணராகிய சிவபெருமான் எந்தக்காலமும் திருமூலட்டானத்திலே ஸ்வயம்புவாகிய மூலலிங்கத் திருமேனிகொண்டு எழுந்தருளியிருப்பர். திருமூலட்டானமுடையார் கோயிலுக்குத் தென்மேற்கே ஸ்ரீ வேணுவனநாதர்கோயிலும் தெற்கே அநவரததானநாதர்கோயிலும் விளங்கும். இவற்றிற்குத்தென்றிசையிலுள்ளது வடிவுடையம்மைகோயில். இவ்வடிவுடையம்மை கோயிலுக்கு வடகீழ்த்திசையிலே பொற்றாமரை என்னும் திவ்வியதீர்த்தமுண்டு. திருமூலட்டானமுடையார் கோயிலுக்கு மேற்றிசையிலே நிருத்தஸ்தானமாகிய தாம்பிரசபை உண்டு. தாம்பிரபர்ணி என்னும் பொருநைநதியானது இந்தத்தலத்தைச் சூழ்ந்து வரும்பொழுது உத்தரதிசையை நோக்கிச் சென்று தக்ஷிணகங்கையென்றும் அதனாலே சூழப்பட்ட இந்தத்தலம் தக்ஷிணகாசி என்றும் வழங்கப்பெறும். இங்குள்ள கம்பைநதிக்கரையிலே சர்வலோகஜநநியாகிய பார்வதிதேவியார் தபோவடிவங்கொண்டு தமது நாயகராகிய சிவபெருமானை நோக்கி நெடுங்காலம் தபசுபண்ணி முப்பத்திரண்டு அறங்களையும் வளர்த்தமையாலும், அப்பொழுது சிவபெருமான் அப்பார்வதி தேவியாருக்குக் காட்சிதந்தருளித் தாமும் ஸ்ரீ காந்திமதியம்மையாகிய அப்பார்வதிதேவியாரும் உலகம் உய்யவேண்டி மணமகனும் மணமகளுமாய் வீற்றிருந்து திருமணஞ் செய்தருளினமையாலும், பலவளங்களாலும் இந்தத்தலம் தக்ஷிண காஞ்சிஎன்றும் வழங்கப்பெறும். இந்தத்தலத்திலே வேதங்களும், தேவர்களும், முனிவர்களும், மனிதர்களும், பலரும் பலகாலங்களிலும் வந்து வழிபாடுசெய்து நிருத்தம் தரிசித்துத் தாம் தாம் எண்ணிய எண்ணியவாறே போக மோக்ஷங்களைப் பெற்றார்களென்று புராணவிதிகாசங்களிலே சொல்லப்பட்டிருக்கின்றது.

## ௬. வேணுவனம்.

சர்வலோகைகநாயகராகிய சிவபெருமான் தமது அநுக்கிரகத்தைப்பெற்றுத் தம்மாலளிக்கப்பட்ட ஒவ்வோர்கிருத்தியத்தை அததற்குரிய காலவெல்லைவரை நடத்திவருகின்ற அபரகர்த்தாக்களாகிய பிரமா விஷ்ணு முதலிய தேவர்களும், சூரியசந்திரர்களும், முனிவர்களும், மற்றைச் சராசரங்களும் இறந்தொழிகின்ற மகாப்பிரளயகாலத்திலே முன்னைப்பழம்பொருட்கும் முன்னைப்பழம்பொருளாகியதாம், தமது தாதாத்மிய சத்தியாகிய பார்வதிதேவியார் காணச் சிற்பரவியோமமாகிய தாம்பிரசபையிலே ஆநந்தநிருத்தம் செய்தருளுவர். அப்பொழுது சிவபெருமானிடத்தினின்றுந் தோன்றி அவரது ஆஞ்ஞாசொரூபமாயிருக்கின்ற வேதங்கள், தாமும் பிறர்போல இறந்தொழியாது நித்தியமாயிருந்து அவரது ஆநந்தநிருத்தத்தைத் தரிசித்தல்வேண்டும் என்று கருத்துக்கொண்டு, அது சர்வசாமர்த்தியராகிய பரமேசரது அருளைப் பெற்றாலன்றி முடியாதென்பதை உணர்ந்து, ஸ்ரீ கைலாயமலையை அடைந்து, மஹா மந்திரஸ்வரூபராகிய சிவபெருமானைநோக்கி நெடுங்காலம் அரியதவங்களைச் செய்தன. அதுகண்டு அன்பர்கள் செய்யுந் தபசிற்கிரங்கி அவர் வேண்டுவனவற்றை அளிக்குங் கருணைவள்ளலாகிய கைலாசபதி உமாதேவிசமேதராய் இடபவாகனத்தின் மீது கணங்கள் சூழ வெளிநின்றருளினார். உடனே தவத்தால் வருந்திய வேதங்கள் கம்பிதமும் விம்மிதமும் கொண்டு கண்ணீர்வார உரோமஞ்சிலிர்ப்பச் சிரசின்மீது கைகுவித்துக் கும்பிட்டு விழுந்து நமஸ்கரித்து எழுந்து கூத்தாடி இசையோடு பலமுகங்களாகநின்று தோத்திரம் பண்ணின. பரமகிருபாளுவாகிய சிவபெருமான் அவற்றைக்கேட்டுத் திருவுள்ளமகிழ்ந்து "வேதங்காள், அமைக. நீவிர் நம்மேற் பத்திசெய்து நெடுங்காலம் புரிந்த அரியதபசும், இப்பொழுது செய்ததோத்திரமும் எமக்கு வெகுபிரீதியை விளைவித்தன. நீவிர் விரும்பியவரங்களைக் கேளுங்கள். தருவோம்." என்று திருவாய்மலர்ந்தருளினார். அதுகேட்டு வேதங்கள் "எம்பெருமானே! அகிலசரீரணராகிய சுவாமீ! ஆதிகாலத்திலே நாங்கள் தேவரீரிடத்தினின்றும் தோன்றினமையினாலே என்றும் தேவரீரைப் பிரியாதுநின்று தேவரீரது நித்தியமாகிய தாம்பிரசபாநிருத்தத்தைத் தரிசித்தல்வேண்டும். மகாப்பிரளயத்தினுமழிவில்லாத புண்ணியஸ்தலத்தின்கண்ணே தேவரீர் திருமேனிகொண்டெழுந்தருளியிருப்ப நாங்கள் நித்தியமாய்த் தருக்களாய்ச் சூழ்ந்துநின்று தேவரீருக்கு நிழல் பரப்புதல்வேண்டும். அதுவன்றியும், நாங்கள் மூங்கில் என்னுந் தாயாய்நிற்ப எமதுட்பொருளாயிருக்கின்ற பரமகாரணர் தேவரீரே என்பதை உலகமறி-



ந்து உய்யும்பொருட்டுத் தேவரீர் எம்மிடத்து முத்துப்போலத் தோன்றி அத்தலத்திற்குஎன்றும் அக்காரணத்தாலாகிய வேணுவனம்என்னும் பெயரே வழங்குவித்து உயிர்கள்செய்யும் வழிபாட்டை ஏற்று அருள்செய்தல்வேண்டும்." என்று விண்ணப்பம் செய்தன. அதுகேட்டு, வேண்டுவார்வேண்டியதே ஈயும் பரங்கருணைத் தடங்கடலாகிய கைலாசபதி புன்முறுவல்செய்து "அங்ஙனமாகுக" என்று இயைந்து; "வேதங்காள், இவ்வுத்தர கயிலாயத்திலுள்ள தாம்பிரசபையிற்போலப் பூலோகத்திலுள்ள தக்ஷிணகயிலாயத்திலும் தாம்பிரசபையிலே நாம் அநவரததாண்டவம் செய்தருளுவோம். பூலோகத்திலே நமக்கு நிருத்தஸ்தானங்கள் இருபத்தொன்று. அவற்றுள்ளே சிறந்தன ஏழு. பூலோகத்திலே தக்ஷிணதேசத்திலே தக்ஷிணகயிலாயம் என்னும் பிரமவிருத்தபுரத்திலே தாம்பிரசபையிலும், கடம்பவனத்திலே இரசிதசபையிலும், தில்லைவனத்திலே கனகசபையிலும், காஞ்சிபுரத்திலே பராகாசசபையிலும், திருக்குற்றாலத்திலே சித்திரசபையிலும், வேதாரணியத்திலே வேதசபையிலும், சுசீந்திரத்திலே தேவசபையிலும், நடித்தருள்வோம். இவற்றுள் பிரமவிருத்தபுரத்திலே தாம்பிரசபையிலே எமக்கு மிகவும் பிரீதி உண்டு. அங்கே பிரதோஷகாலத்திலும், பன்னிரண்டுமாச சங்கிரமங்களிலும், மார்கழித் திருவாதிரையிலும் விசேடமாக நடனம் தரிசிப்பித்தருளுவோம், பிரமவிருத்தபுரம் சத்திபுரம், சிவபுரம் என்னும் இரண்டுமாக விளங்கும். அந்தத்தானம் தருமதேவதை இடபவடிவங்கொண்டு வந்து நம்மைப் பூசித்தலினாலே தருமக்ஷேத்திரம் என்றும், கங்கைமுதலிய சகல புண்ணியநதிகளும் வந்து நம்மைப் பூசித்துப் பலவரங்களைப் பெறுதலினாலே சர்வதீர்த்தபுரம் என்றும், தேவர்கள்வந்து தருக்களாய்நின்று தபசுபண்ணிப் பிரியாதிருத்தலினாலே தேவதாருவனம் என்றும் பெயர்பெறும். அந்தத்தானத்திலே பிறப்பவர்களும், வசிப்பவர்களும், இறப்பவர்களும் எமது சொரூபத்தைப் பெறுதற்குஉரியராவர்கள். நீவிர் அந்தத்தானத்தை அடைந்து மூங்கில்களாயமைந்து அங்குள்ள திருமூலட்டானத்திலே எமது திருமேனிக்கு நிழல்பரப்பியிருங்கள். நாம் நீவிர் விரும்பியவாறே அருள்செய்வோம்." என்று அத்தலத்தினது மகிமைகளையும் அருளிச்செய்து மறைந்தருளினார். அவ்வாறே வேதங்கள் திருநெல்வேலி என்னும் தேவதாருவனத்தை அடைந்து மூங்கில்களாகித் திருமூலட்டானேசுரருக்கு நிழல்பரப்பி ஆயிரம் வருடங்களாக அன்போடு பூசைசெய்து சேவித்துநின்றன. அதனாலே திருமூலட்டானமுடையார் வேதங்களுக்குப் பிரசன்னமாகி, "வேதங்காள், நீவிர் முன் வேண்டிக்கொண்டவாறே இத்தானம் வேணுவனம் என்னும் பேரால் பிரசித்திபெற்றுவிளங்கவும், உம்மிடத்தி-

னின்றும் நாம்முந்தாகித்தோன்றவும், நாம் தாம்பிரசபையிலே நின்று செய்கின்ற நிருத்தத்தை நீவிர்பிரியாது நின்று தரிசிக்கவும் திருவுள்ளமிசைந்தோம். நீவிர் பிரளயத்தினும் அழிவில்லாத இந்தத்தலத்திலே இப்படியே வேணுவனமாயிருங்கள்" என்று கட்டளையிட்டுத் தமது மூலலிங்கரூபத்திலே கலந்தருளினர்.

அப்படியே வேதங்கள் எந்தக்காலமும் வேணுவனரூபமாய் நெருங்கிநின்று சிவபெருமானது திருமேனிக்குநிழல்பரப்புதலினாலே "வேணுவனம்" என்னும்பெயர் உண்டாயிற்று. இஃது இங்ஙனமாக,

## ஸ்ரீவேணுவனமஹாலிங்கம் வேண்டவளர்ந்தருளியவரலாறு.

### ௨. வேண்டவளர்ந்த மஹாலிங்கம்.

முன்னொருகாலத்திலே வேணுவனத்தின் கீழ்த்திசையிலே பலவளங்களோடுகூடிய மணவை என்னும் ஊரிலே ராமபாண்டியன் என்னும் அரசன் சிவபக்தியும் சீவகாருண்ணியமும் பூண்டு தருமநெறிவழுவாது செங்கோல்செலுத்திவருவானாயினன். இவ்வரசன் வைதிகமும் சைவமும் தழைத்தோங்கும்படி யாகங்களைச் செய்வித்தும் அநேக சிவதருமங்களைச் செய்வித்தும், வித்துவான்களுக்கு வேண்டுவனவற்றைக்கொடுத்துவித்தையைப் பிரபலஞ்செய்தும், அசுரர் இராக்கதர் முதலியோரால் அபாயம் நேரிடாது முனிவர்களுடைய தவங்களைப் பாதுகாத்தும், தேவாலயங்களிலே நித்திய, நைமித்திக,காமியம் என்னும் மூவகைக் கருமங்களும் நியமந்தப்பாது நடைபெறும்படி நிபந்தங்கள் அமைத்தும் உயிர்கள் இன்பமடைந்து வாழும்படி தருமபரிபாலனஞ்செய்துவருவான். அதனாலே காலந்தோறும் மழைபொழிந்து தனதானியங்கள் விர்த்தியாகி உலகம் இன்புறுவதாயிற்று. அந்நாளிலே அவ்வரசனது பசுநிரைகளை மேய்க்கின்ற ஆயர்சேரியிலே ராமக்கோன் என்பவன் ஒருவனிருந்தான். அவன் சிவபத்தி அடியார்பத்தியும், சத்தியமும், சித்த சுத்தியும் உடையவனாய் ஆயர்களுக்கெல்லாம் தலைவனாய்ப் பசுநிரைகளை வேணுவனத்திலே மேய்த்துப் பொருநைநதியிலே நீரூட்டி மரநிழலிலே சேர்த்துச் சிரத்தையோடு மிருகபயமின்றிப் பரிபாலித்துத் தினந்தோறும் அரசனுக்குப் பால்கொடுத்துக்கொண்டுவருவான். இப்படி நிகழும் நாளிலே, ஒரு நாள் ராமக்கோன் சூரியாஸ்தமனமாகும்பொழுது ஆயர்களோடு பாற்குடம் சுமந்து வேணுவனத்துவழியால் விரைந்து வருங்காலைப் பரமசிவனது திருவருளினாலே அவ்வனத்திலுள்ள மூங்கின்முளையொன்று இடறப் பாற்குடங்கள் கவிழ்ந்து பால் சிந்தியன. அது கண்டு ராமக்கோன்



மூங்கின் முளை இடறப் பால் முளையின்மேற் சொரிந்ததும், குடங்கள் உடையாமல் உருண்டோடியதும் நோக்கி அதிசயமும், அரசன் கோபிப்பானென்றெண்ணிப் பயமும் கொண்டு குடங்களை எடுத்து நிலத்திலே மலினப்படாது எஞ்சியபாலை மொண்டுவிட்டு இராசமாளிகையிற் சென்று பாலை ஒப்பித்துத் தனது சேரியை அடைந்து நிகழ்ந்த சமாசாரத்தைத் தன்கிளைகளுக்குச் சொல்லிப் பயத்தினாலே அன்றிரவு உணவொழிந்து உறங்காதிருந்தான்.

மற்றைநாள் விடியற்காலத்திலே எழுந்திருந்து பசுநிரையிற் போய் முதனாளினும் இருமடங்கு பால்சுரப்பக் கறந்து குடங்களில் நிரப்பிக்கொண்டு வேணுவனத்துவழியால் வரலும், முன்போல அந்த மூங்கின் முளை இடறப் பால்சொரிந்து குடம் உருண்டோடியது. அதுகண்டு ராமக்கோன் வருத்தமடைந்து "இவ்விடத்து ஏதோ அதிசயம் இருக்கின்றதுபோலும்" என்றெண்ணி மகிழ்ந்து பாலைக் குடத்தில்வாரிவிட்டுக்கொண்டுபோய் இராசமாளிகையிற் கொடுத்தான். பால் குறைந்திருப்பது கண்ட ஏவலாளர்கள் "பால் குறைந்தது என்னை" என்று கேட்ப, அப்பொழுது ராமக்கோன் பயந்து வேறொன்றுஞ்சொல்லவறியாது "இனி வரும் நாட்களிற் குடம் நிரம்பக் கொண்டுவருவேன்" என்றுசொல்லித் தனது சேரிக்கு மீண்டு அன்று நிகழ்ந்த சமாசாரத்தையும் தன் கிளைகளுக்குச்சொல்லி அரசன் தன்னை ஒறுப்பானே என்று அஞ்சி உறக்கமின்றியிருந்தான்.

மூன்றாநாள் விடியற்காலத்திலே ராமக்கோன் எழுந்து பசுநிரையிற்போய் அதிகமாகப் பால்சுரப்பக் கறந்து குடத்திலே மொண்டு நிரப்பிக்கொண்டு முன்போல வேணுவனத்து வழியாக விரைந்து சாவதானமாக வந்தான். அப்பொழுதும் மூங்கின்முளை இடறப் பால்கவிழ்ந்து சொரிந்து குடமுருண்டோடியது. அதுகண்டு ராமக்கோன் ஆயர்களோடு வருந்தி, "இம் மூங்கின் முளையை வெட்டும்படி ஆயுதங்கொண்டு வரல் வேண்டுமென்று இரண்டுதினங்களாக நினைத்துக் கொண்டுபோயும், யாதுகாரணமோ! மறந்துவிட்டேன். அதுமட்டோ, இனி மூங்கின்முளை இடறாதபடி செல்லல்வேண்டுமென்று சாவதானமாக வந்தேனாகத் தானே இடறுண்டு பால்சொரிந்தது. மற்றும் இவ்வழிதான் செல்லுவதாரும். இஃதென்னை! அதிசயம்" என்றுசொல்லி "இன்றும் பால் குறைந்ததே இனி அரசனது ஏவலாளர்களுக்கு என்னசொல்லுவேன்" என்றுபயந்து "நாளைக்கு இந்த மூங்கின் முளையைத் தப்பாது வெட்டிவிடுவேன்" என்று உறுதிசெய்துகொண்டு, பாலை குடத்தில் வாரிவிட்டு இராசமாளிகையிற் கொண்டுபோய்க் கொடுத்தான். முன்போலப் பால் குறைந்திருப்பது கண்ட ஏவலாளர்கள் கோபித்து, "ஐயனே! பாலையெங்கே ஒளித்தாய். இ

ன்றும் குறைந்துவிட்டதே" என்று உறுக்கித் தண்டலாளர்களிடத்தில் ஒப்பித்தார்கள். அத்தண்டலாளர்கள் அரசன் முன்னிலையிற் கொண்டுபோய், "பெருமானே! இந்த வயோதிகனாகிய இடையன் சிறிதும் புத்தியில்லாதவன். இன்றைக்குப் பால் குறைத்துக்கொண்டுவந்தான். மூன்றுமிப்படியே கொண்டுவந்தான்." என்றுதெரிவித்தார்கள். அரசன் கண்கள்சிவக்கக் கோபங்கொண்டு "குறைப்பாலாகக் கொண்டுவருதற்குக் காரணமென்னை" என்றுகேட்டான். மூதாயனாகிய ராமக்கோன் மனம்வருந்தி வாய்குளறி, "பெருமானே! நாளைமுதலாகக் குடம் நிரம்பப் பால்கொண்டுவருவேன்; இப்பொழுது இந்தப்பிழையைப் பொறுத்தருளல்வேண்டும்" என்று பிரார்த்தித்தான். அதற்கிரங்கிஅரசன் மகிழ்ந்து அன்புகொண்டு "ஆயனே! நீ செய்தபிழையைப் பொறுத்துக்கொண்டோம். இனிமேற் பால்குறையாதபடி நிரப்பிக்கொண்டுவரக்கடவாய்என்று"விதித்துவிட்டான்" ராமக்கோன் "அப்படிச்செய்வேன்" என்று விடைபெற்றுக்கொண்டு தனது சேரியை அடைந்து தன்மனையாளை நோக்கி வழியிலே மூங்கின்முளை இடறப் பால் சொரிதலும், முளையைச்சூழ்ந்து ஒருமுழம் அகல வலம்வந்து குடம் உடையாது உருண்டோடுதலும், அந்தவழிவிட்டு வேறுவழி பற்றிச்சென்றாலும் பரவசமாய் முந்திய வழியிற்சென்று பாலெல்லாங் கவிழ்த்தலும், அது முளையடியிற்சென்று சொரியத் தான் சோகித்துநின்று அயர்தலும், இந்த மூங்கின்முளையைக் கோடாரியினால் வெட்டிவிடுவேனென்று நினைத்துச்சென்றும் அம்முளை வழியிற் போனமாத்திரத்து அதனை மறந்துநிற்றலும் என்னும் இவ்வதிசய நிகழ்ச்சிகளைச் சொல்லி "இது என்னை, !தெய்வீகமோ? அறியேன்" என்பான். "இனிப் பால் குறைந்தால் அரசன் தண்டிப்பானே. இதற்கு யாது செய்வேன்" என்று அயர்வான். இப்படியே அதிசயமும் அச்சமுங்கொண்டு நாளைக்குப் பால்கொண்டுபோம்போது அந்த மூங்கின்முளையைத் தப்பாது வெட்டிவிடல்வேண்டும். நான் கட்டிக்கொண்டு செல்லுதற்கு மறந்து போதலும் கூடும். ஆதலால் நீ எனது கோடாரியை "என் அரையிற் கட்டிவிடு" என்று தன்மனையாட்டிக்குக் கற்பித்துப் பயத்தினாலே உண்டி உறக்கங்கள் ஒழிந்து கோடாரிகட்டப்பட்ட அரையினையுடையவனாய் விசாரப்பட்டுக்கொண்டிருந்தான். அரிபிரமேந்திராதிகளுக்கும் எட்டாத தமது நிலைமையைச் சித்த சுத்தியுடைய தமது மெய்யன்பர்களுக்கு எப்படி நினைப்பித்து எப்படிக்காட்டல்வேண்டுமோ அப்படி நினைப்பித்து அப்படிக்காட்டி வெளிநின்றருள்செய்பவராகிய பரமசிவனது திருவருளினாலே ராமக்கோன் அன்றிரவுமுழுதும் வேறொன்றிற் சிந்தை செலுத்தாது மூங்கின் முளையைச் சிறிதும் மறவாத சிந்தையுடையனாய்ப் படுத்திருந்தான்.



நாலாநாள் விடியற்காலையில் ராமக்கோன் இடரொழிந்து எழுந்திருந்து பசுக்கிடையிற் போய்ப் பால் கறந்து குடங்களில் நிரப்பிக்கொண்டு வேணுவனத்துவழியால் வந்தான். வரலும், முன்போல அந்த மூங்கின்முளை இடறப் பால் கவிழ்ந்து சொரிந்து குடமுருண்டோடியது. உடனே ராமக்கோன் கோபங்கொண்டு அந்த மூங்கின்முளையை வெட்டுவேனென்று உன்னிக் கோடாரியைக் கையிற்கொண்டு ஓச்சினான். அது நித்தியமாகிய வேதங்களினது உச்சியினின்று அகண்டபரிபூரணானந்தசொரூபியாய் நடிக்கின்ற பரமகாரணராகிய சிவபெருமானது உச்சியின்மீது பட்டது. படுதலும், பதிந்து வடுவுண்டாகி இரத்தம் ஆறுபோலப் பாய்ந்தது. இதனைக்கண்டு ராமக்கோன் "இஃதென்னை! அபாயம் நேரிட்டதே" என்று ஏங்கி அலறி விழுந்து பரவசமாயினான். பின் ஒருவாறு தேறியெழுந்து "எனது இடைமதியாலே செய்யலாகாத அபராதஞ் செய்தேனே. தம்மிடத்தில் மெய்யன்புசெய்வார்க்கு வெளிவந்துநிற்கின்ற கருணாகரராகிய பரமசிவப்பிரபுவே இங்கெழுந்தருளியவராதல்வேண்டும். எம்பெருமான் விஷயத்தில் என்ன பிழை செய்தேன்" என்று நடுங்கிச்சோகித்து வேறொன்றும் செய்யவறியாது அரசனிடத்தில் ஓடிப்போய் வணங்கி முன்னின்று சொல்வானாயினான். "பெருமானே, முந்திய மூன்றுநாளும் அடியேன் வேணுவனத்துவழியால் நடந்து பாற்குடங்கொண்டு வருவேனாக அங்குள்ள மூங்கின்முளை ஒன்று இடறப் பால் கவிழ்ந்து சொரிந்து குடமுடையாது உருண்டோடிவிடும். அடியேனும் விழுந்துவிடுவேன். அம்முளையை வெட்டிவிடல்வேண்டுமென்றெண்ணிப் போவேன். பின் யாது காரணமோ, கோடாரி எடுக்க மறந்துவிடுவேன். நாலாநாளாகிய இன்றுகாலையில் அந்தமார்க்கமாக வரும்போது எனது நினைப்புமறந்து பரவசமாகக் குடங்கவிழ்ந்து பால்சொரிந்தது. உடனே கோபித்துக் கோடாரியை எடுத்து ஓச்சுதலும், அது அம்முளையின்மேற்பட்டுப் பதிவுண்டாகி இரத்தம்ஆறுபோலச் சொரிந்தது. உருவத்தையோ வெளிப்படக் காணேன். நிகழ்ந்தவாறு நோக்கச் சிவன்செயலாயிருக்கின்றது. அடியேன் ஒன்றுமறியேன்" என்று விண்ணப்பஞ்செய்தான்.

இவையெல்லாம் அரசன்கேட்டுப் பதைத்து அன்போடு "இது என்னை அதிசயம் பார்ப்போம்" என்று மந்திரிமுதலியோர் சூழ அரமனையினீங்கிப் புறப்பட்டுத் தேவர்கள்சூழ்ந்து சேவிக்கின்ற வேணுவனத்தைஅடைந்தான் அடைந்து ராமக்கோன் வழிகாட்ட அவ்வழியே வரும்பொழுது பலவளங்களையும் நன்னிமித்தங்களையும் பல அற்புதங்களையும் கண்டு வியந்து, பகைப்பொருள்களாகிய விலங்குகள் பறவைகளெல்லாம் அப்பகைமை

நீங்கித் தம்முட் கலந்து கொண்டாடிக் குலவுகின்ற அதிதிவ்வியதீர்த்தமாகிய பொற்றாமரைவாவியையும், திருமூலட்டானமுடையார் கோயிலையும் தரிசித்தான். அப்பொழுது அரசன் "இங்கே அநேக நன்மையாகிய வளங்கள் காணப்படுதலினாலே இது மிகமேலாகிய தெய்வத்தானமாதல்வேண்டும். இங்கே அநேக அற்புதங்களும் நன்னிமித்தங்களும் கண்டு பந்தமாகிய கன்மமாசு பாவம் நீங்கிப் பரவசமாய் ஆனந்தமடைந்தேன். அதனால் இவ்வற்புதமாகிய தெய்வத்தானத்தில் அத்தியந்தசௌந்தரியரூபமாகிய சிவலிங்கமொன்று காண்பேன்" என்று மந்திரி சேனாபதி முதலியோர்களை நோக்கிச் சொன்னான். சொல்லிக்கொண்டு வரும்பொழுது, உயிர்களுக்கு இருவினையொப்பு மலபரிபாகம் வந்தவிடத்து அவ்வுயிர்களது மறைப்புநீங்க வெளிநின்றருள்செய்கின்ற பரமசுகப்பிரதராகிய சிவபெருமானது அநுக்கிரகத்தினாலே முன்னைத் தொடர்ச்சிபற்றிவந்த இருவினைத்தொடக்கொழிந்து, நிஷ்காமியமாகிய சிவகைங்கரியஞ்செய்து சிவாநுக்கிரகபரமப்பிரசாதம் பெறுதற்குரிய புண்ணியபரிபாகமுடையனாகிய அரசன் திருமூலட்டானத்திற்குத் தென்மேற்றிசையிலே இரத்தவெள்ளம் ஆறுபோலப்பொழிய முதல்வராகிய சிவலிங்கப்பெருமான் எழுந்தருளியிருந்த மூங்கின்முளையின்பக்கத்திலே வந்து நிகழ்ந்தபடி கண்டு "இது பரமசிவன் விஷயத்தில் நிகழ்ந்த செயல்" என்று தெளிந்து, பதைபதைத்து நடுநடுங்கி அஞ்சிக்கண்ணீர்வார அழுது பரவசமாயினான். பின் அரசன் ஒருவாறு தெளிந்து, "எம்பெருமானே, சுவாமீ, பிரமா விஷ்ணு முதலிய தேவர்களும் வேதங்களும் பலமுகங்களாகத் தேடியும் காணப்பெறாத பெருமையுடையீர், தேவரீர் ஒன்றுக்கும் பற்றாத சிறியேனை ஆட்கொள்ளும் பொருட்டு இவ்வேணுவனத்தின்கண்ணே திருமேனிகொண்டு எழுந்தருளியிருந்த அருமை அறியாது கடையேன் என்றும் நீங்காத அபராதத்திற்கு ஆளாயினேன். இது ஆயன் செய்த பிழையன்று, நாயினேன் செய்த பிழையென்று அஞ்சுகின்றேன்" என்பான். "இவ்வாயன் வெட்டிய வெட்டுப் பிரமனுங்காணாத சடைமுடிமீது பட்டதோ! அதன்கண்ணிருக்கின்ற கங்காதேவிமீது பட்டதோ! வாமபாகத்திலிருக்கின்ற பார்ப்பதிதேவியார்மீது பட்டதோ!" என்பான். ஆயனை நோக்கி, "ஓ மதியிலாதாய், நீ இவ்விசயங்கள் டலகண்டும் உனது வெள்ளறிவினாற் சினந்து தாயினுமினிய தயாநிதிமீது கருவிகொண்டு வெட்டவோ!! உன்னுடைமையால் என்னினைந்து என்செய்தாய்" என்று கோபிப்பான். "எனது செங்கோன்முறைமை இருந்தவாறு நன்று நன்று" என்று வருந்துவான். "எம்பெருமானுக்கு அபராதம் செய்ய நானொருவன் பிறந்தவாறு!" என்று கோபிப்பான். "திருமேனியினின்று இரத்தவெள்ளம் பொ



ழிகின்றதே. இதனைத் தடுத்தற்கு வழி ஒன்றுங் காணேனே." என்று பரிதபிப்பான். இப்படிப் பலவாறு சொல்லிப் பத்திபழுத்த சித்தமுடையனாகிய ராமபாண்டியன், வேறு செய்வதொன்றறியாது, அன்பின்மிகுதி பீட்டினாலே பிரமனும் மறையுங் காணாத சிவபெருமானது சென்னிமீது தனது கையை வைத்து இரத்தத்தைத் துடைத்தான். உடனே இரத்தம் நின்றுவிட்டது. அரசன் மெய்யன்புடையார் செய்வனவெல்லாம் இதமெனக்கொண்டு குழைகின்ற கடவுளது சென்னிமீது தனது கரம் பட்டமாத்திரத்தில் இரத்தம் தடைப்பட்டு நின்றபடி கண்டு, பெருமகிழ்ச்சியும் பெருவியப்புமுடையனாய், "நான் பெற்ற பேறன்றோ பேறு!! இது யாருக்குக்கிடைக்கும்" என்று தருக்கி ஆடிப்பாடிக் களிகொண்டு ஆரவாரித்தான். "தருப்பளவும் பற்றாத தமியேனுக்கு எம்பெருமானது திருவருளிருந்தவாறு என்னே! என்னே!" என்று வியந்து அச்சமும் ஆராமையும் காதலும் உடையனாயினான். "எம்பெருமானே, அன்பர்க்கெளிவந்த அரும்பெறலே, நாயினேன் நீதியோ அறியேன். அதன்வழி ஒழுகும் ஒழுக்கமும் அறியேன். தேவரீர்பால் அன்பென்பது சற்றும் உற்றறியேன். ஒன்றுக்கும் பற்றாத நாயினேனளவிலும் தேவரீர் திருவிளையாடல் இருந்தபடி இப்படியா!! இனித் தேவரீர் தமியேன்மீது இரங்கித் திருமேனிகாட்டியருளல்வேண்டும்," என்று அரசன் பலமுறை பிரார்த்தித்தான். தாம் பெற்ற பாலர்களுக்கு நானாவிதமாகிய விளையாடல்களைக் காட்டி அவைபற்றி அவர்கள் பரிதபிக்குமாறும் மகிழுமாறுங்கண்டு அவர்களன்பினளவு நோக்கி மகிழ்கின்ற தந்தையர்கள்போலத், தமது புதல்வர்களாகிய உயிர்களுக்கு அவரவர் பருவபேதங்கண்டு, நமர்கள் துன்பமாகவும் இன்பமாகவும் நிகழ்வன போலும் நானாவிதமாகிய திருவிளையாடல்களைக் காட்டி அவைபற்றி அவ்வுயிர்கள் பரிதபிக்குமாறும் மகிழுமாறுங்கண்டு, அவர்பாலுள்ள அன்பினளவு நோக்கிப் பொருள் சுரக்கின்ற பரமதந்தையாராகிய சிவபெருமான் அரசன் செய்த பிரார்த்தனைக்கிரங்கி அவ்வரசன் கருத்தை முற்றுவிக்கவும், வேதங்கள் செய்த தவப்பயனைக் காலம் நோக்கி அவ்வேதங்களுக்கு எய்துவிக்கவும், வேதங்களினது உட்பொருளாய், அன்பர்களுக்கன்றிப் பிறர்க்கு அறியவொட்டாத அதிரகசியமாய், வேறொன்றினாலும் பெறற்கரியதும்மை அன்பும் அறிவும்கொண்டு பெறுவார் பெறற்குரிய அரும்பெறலாய், பெற்றவர்களுக்கு மேலே விரும்பிப் பெறற்பாலது பிறிதொன்றில்லையென்னும்படி பெருஞ்சிறப்புமாய்ச், சிறுமைக்கும் பெருமைக்கும் வரம்பாய், அவ்வேதங்களிற் சார்தும் வெளிப்பட்டும் நிற்கின்ற கள்வர் தாமேயென்பதையும், வேதங்களினது உட்பொருளாந்தன்மை முதலிய இவ்வியல்புகளை ஏனை

த்தேவர்பாலேற்றிப் பிறர் கூறும் கூற்றுக்களெல்லாம் பயனில்கூற்றுக்களாமென்பதையும் உலகிற்குக் கண்கூடாகத் தெளிவித்து உய்விக்கவும் திருவுளங்கொண்டு வேதவடிவாகிய மூங்கிலினிடத்து அதனுட்பொருளாகிய தாம் முத்துவடிவாகித் தோன்றித் தமது சோதிலிங்கசுரூபத்தைக் காட்டியருளினார். அதனை அரசன் தனது இருகண்களும் களிப்பக் கண்டு தழலிடைப்பட்ட மெழுகுபோல மனம் கரைந்து என்பு நெக்கு நெக்குருகத் தடையற்றவெள்ளம்போல ஆநந்தபாஷ்பம் பொழிய ரோமப்புளகங்கொள்ள நாத்தழுதழுப்ப அமுத பரவசமாகிச் சுகாநந்த வாரிதியிலே படிந்து பலமுறை தோத்திரங்கள் செய்து, "எம்பெருமானே, அகிலகாரணராகிய சுவாமீ, அடியேன்மீது தேவரீர் செய்த கருணையென்னே கருணை!! இதற்குத் தமியேன் செய்யும் கைம்மாறு என்னை உளது!! தமியேனும், தமியேனது தேகமும் கரணங்களும், அவைகொண்டு செய்யும் கருமங்களும், அவற்றின்பயன்களாகிய போக போக்கியங்களும், ஒழிந்தனவும் ஆகிய அனைத்தும் தேவரீருடைமைப்பொருள்களேயன்றி வேறில்லை எனின், இதனை உணர்ந்துவைத்தும், சர்வசுதந்திரரும் சர்வைசுவரியருமாகிய தேவரீருக்குத் தமியேன் வேறாகநின்று கைம்மாறு செய்வல் என்று நினைப்பதும், செய்வதும் எப்படிக் கூடும்? தேவரீருக்குத் தமியேன் மீளாஅடிமை என்னும் உண்மை உணர்ந்து, அனைத்தும் தேவரீருடைமைப்பொருள்களாகத் தற்போதமறத் திருவருள்வழிப்பட்டு நின்று என்றும் தேவரீரைப் பூசித்து நிற்றலேயன்றித் தமியேன் செய்யத்தக்க செயல் வேறு யாது உளது? அதுவும் தேவரீர் திருமேனிகாட்டியருளிய இந்தத் தானத்தில் இந்தச் சோதிலிங்கத்திலே செய்தல் வேண்டும் என்று விரும்புகின்றேன். அவ்வாறு செய்யுமிடத்துத் தேவரீருக்கு அபிஷேகம்செய்து அருச்சித்து விழா நடத்தல் வேண்டுமே. ஆதலால், எல்லாம்வல்ல தெய்வமே, சுவாமீ, தமியேன் செய்த பிழைகளையெல்லாம் பொறுத்துத் தேவரீர் இன்னும் திருமேனி வளர்ந்து காட்டியருளல்வேண்டும்" என்று அன்போடும் அச்சத்தோடும் பிரார்த்தித்தான். அதுகேட்டு வேயீன்ற முத்தராகிய வேதமுதல்வர் நிரபராதியாகிய அவ்வரசனது மெய்யன்புபற்றிய பிரார்த்தனைக்கிரங்கி, ராமக்கோன் வெட்டியவெட்டுத் தமது அதிப்பிரியையாகிய பார்ப்பதிதேவி பாகத்திற்பட்டால் சகிக்கலாற்றாது வருந்துவாள் என்று கருதியோ, வெட்டுவிழும்படி பாலைக் கவிழ்த்தலாகியசெயல் தம்பாலதன்றிப் பார்ப்பதிதேவிபாலதன்று என்று கருதியோ, யாது காரணத்தாலோ, அதனைத் தமது சிரசின் வலப்பாலிற் படக்கொண்ட தழும்பும், இரத்தம்சொரிந்து ஒய்ந்த மேனியுமாகப் பன்முறை பலதவங்கள்செய்த அரசன் கண்



ணும் மனமும் களிகூர்ந்து காணும்படி அண்டகோளகைமட்டும் வளர்ந்து நின்றருளினார். அப்பொழுது ஆகாயத்திலே தேவதுந்துபிகள் ஆரவாரித்தன. சின்னங்கள் ஒலித்தன. பலவகைவாத்தியங்களும் முழங்கின. பிராமணர்களும் முனிவர்களும் வேதங்களையும் உபநிஷத்துக்களையும் எடுத்தோதினார்கள். சைவமாதவர்கள் பரானந்தபரவசர்களாய் அரகரமுழக்கம் செய்தார்கள். தேவர்கள் கற்பகப்பூமாரி பொழிந்தார்கள். அரசன் இந்தப் பலசிறப்புகளும் நிகழ எம்பெருமான் வளர்ந்து காட்டியருளிய பரிபூரணானந்தசொரூபத்தைத் தரிசித்து "இது என்னே!! அற்புதம்!! அற்புதம்!!" என்று பலகால் துதித்துக் கும்பிட்டுக் கண்ணீர்வார நமஸ்கரித்து அருச்சித்துத் தொழுது நின்றான். மந்திரி முதலியோர்கள் பலமுறைநோக்கி அன்புசெய்து பரவசர்களாய்ப் பணிந்துநின்றார்கள். இவ்வதிசயங்கண்டு தேவர்களெல்லாம் சூழ்ந்து வணங்கினார்கள். அப்பொழுது அரசன் தனது வேண்டுகோளுக்கியைந்து வளர்ந்துகாட்டியருளிய ஸ்ரீவேணுவனநாதரது கருணையை வியந்து "எம்பெருமானே, தேவரீரது பரிபூரணசொரூபத்தை அடியேங்களுக்குத் தரிசிப்பித்தருளிய 'பெருங்கருணையை' என்னென்றுசொல்லிவியக்கேன். தேவரீர் திருவிளையாடலை யார்தாம் அறியவல்லவர்கள். இனித் தேவரீர் இங்ஙனம் வளர்ந்தபடியே நின்றருளின், உயிர்கள் தாங்கமாட்டாது வருந்துமே. ஆதலால் திருமேனி குறுகியருளுதல் வேண்டும்" என்று அச்சத்தோடு பிரார்த்தித்தான். அருட்பிழம்பாகிய வேண்டவளர்ந்தமகாலிங்கப்பெருமான் அரசனது பிரார்த்தனைக்கிசைந்து தமது திருவிளையாடலினாலே குறுகியருளினார். அரசன் தான் வளர்க என வளர்ந்தும் குறுகுக எனக் குறுகியும் தனது அன்பிற்கெளிவந்துநின்ற அருள்விளையாடலை நோக்கி, "அரிபிரமேந்திராதிதேவர்களெல்லாம் ஆச்சரியத்திற்பட்டு வணங்கிநிற்ப, எத்துணையும் இழிந்த சிறியேனையும் ஒருபொருளெனக்கொண்டு, தமியேன் வேண்டியபடியெல்லாம் இசைந்துநின்ற கருணை இருந்தபடி என்னை என்னை" என்று சொல்லிப் பலவாறு துதித்துப் பத்திமுதிர்ச்சியோடு கும்பிட்டு வலம்வந்து நமஸ்கரித்துப் பேரின்பவெள்ளத்திலே திளைத்து எம்பெருமானது சோதிலிங்கவடிவத்திற்குப் பீடம் சாத்தக்கருதி, அதன் முறைமையை வேதசிவாகமங்களைக் கற்றுணர்ந்த மேதாவியர்களிடத்தே ஆராய்ந்து தெரிந்துகொண்டு, நூல்கள் விதித்தபிரகாரம் பீடம் சாத்தினான். சாத்தலும், வேணுவனமகாலிங்கப்பெருமான் உரிய அளவுக்குமேலே நிமிர்ந்தருளினார். அதுகண்டு அரசன் பின்னும் ஓர் பீடம் சாத்தினான். அதற்கும் அவ்வாறே நிமிர்ந்துகாட்டியருளினார். பின்னும் அரசன் அப்படியே ஓர் பீடம் சாத்தினான். அதற்கும் நிமிர்ந்துகாட்ட

இப்படியே காட்டுந்தோறும் அரசன் அதிசயித்து, அப்படியே இருபத்தொ
ருபீடங்கள் சாத்தி மேலும் வளர்தல் கண்டு, "பெருமைக்கும் நுண்மைக்கும்
எல்லையாகிய கடவுளது விளையாடல் இதுவோ" என்று சொல்லிச் "சுவாமீ,
தேவரீர் இப்படியே வளர்ந்து வளர்ந்து வருவீராயின், தேவரீருக்கு அபிடே
கம் பூசை முதலியன செய்வது எப்படி? தேவரீரது உண்மையை அடியே
ங்களுக்குப் புலப்படுத்தும்படி திருமேனிகொண்டருளினீர். அதனிடத்துத்
தேவரீருக்கு அடியேங்கள் செய்கின்ற பூசையையும் அதுபோலக் கொண்ட
ருளல்வேண்டுமன்றோ? ஆதலால் தேவரீர் இனிப் பீடத்துக்கு உரிய அளவி
ல் நின்றருளல் வேண்டும்" என்று குழைந்து வேண்டினான். அதற்குக் கடவுள்
அவ்வளவில் நின்றருளாது வளர்ந்து நிற்றல்கண்டு, அரசன் இளைத்து வருந்
திச் "சுவதந்திரராகிய எம்பெருமானது கருத்து இதுவாயின், நாயினேன் செ
ய்யத்தக்கது என்னை உளது" என்று தனது உயிரைவிடத் துணிந்து, தன்
கழுத்தில் வாள் பூட்டினான். உடனே அவ்வரசனது பழுத்த பேரன்பை
யும் பெருந்துணிவையும் சித்தநிலையையும் நோக்கி, அருட்பெருங்கடலாகிய
பரமசிவன், இனிச்சகிப்பாரோ, தமது சோதிலிங்கத்திருமேனியானது உரிய
அளவில் நின்றுவிடச்செய்து, அதனாடு ஒரு திருமுகமும், அதனிடத்தொ
ளிர்கின்ற திருப்புன்முறுவலும், கங்கையும் பிறையும் கொன்றைமாலையும் பொ
ருந்திய திருச்சடையும், சங்கக்குண்டலமும் தோடும் அணிந்த இரண்டு திரு
ச்செவிகளும், சோமசூரியாக்கினிகளாகிய மூன்று திருக்கண்களும், தேவர்க
ளைக் காக்க நஞ்சுண்டு கறுத்த கண்டமும், வெண்பூணூல் பிரமன் அரி இருவா
து என்புமாலை சிரமாலை இவைகள் விளங்கிய திருமார்பும், மான் மழு வரத
ம் அபயம் பொருந்திய நான்கு திருக்கரங்களும், புலித்தோலாடையுடுத்த தி
ருவரையும், உயிர்களுக்கு மலநீக்கமும் சிவத்துவமும் அளிக்கின்ற இரண்டு
திருவடிகளும் பொருந்திய திருவெண்ணீறு சண்ணித்த செம்பவளத்திருமே
னிகாட்டி, அரசனது வாள்பூட்டிய கையைத்தடுத்துத் தமது திருக்கரத்தாற்
பிடித்துக்கொண்டு, தமது திருவருள்வடிவாகிய பார்வதிதேவியார் வாமபாக
த்திற் பொருந்தத் தருமவடிவாகிய இடபவாகனத்தின்மீது எதிர்நின்றருளி
னார் அப்பொழுது அரிபிரமன் முதலிய தேவர்களும், வேத வேதியர்களும்,
சைவமாதவர்களும் தொழுது ஆடிப்பாடினார்கள். ஆகாயத்திலே தே[illegible]து
பிகள் ஆர்த்தன பூதர்கள் வாத்தியங்களை முழக்கினார்கள். தும்புரு நாரதர்க
ள் யாழிசை செய்தார்கள். இருடிகள் புகழ்ந்து துதித்தார்கள். அரம்பையர்க
ள் நாட்டியம் செய்தார்கள். கற்பகப்பூமாரி பொழிந்தது. அரசன் தனது வா
ள்பற்றியகையைத் தடுத்த திருக்கரத்தோடு கடவுள் பிரசன்னமானதும், பீட



த்துக்கு உரிய அளவில் திருமேனி நின்றருளியதும் தரிசித்து உவந்து நமஸ்
கரித்து எழுந்து பேரின்பசாகரத்திலே முழுகிப் பலவகைத் தோத்திரங்கள்
செய்தான். பரமேசுரராகிய ஸ்ரீவேணுவனநாதர் திருவுள்ளமகிழ்ந்து ராமபாண்
டியனை நோக்கி அருளிச்செய்வார்: "அன்பனே, நீ செய்த தோத்திரங்களைக்
கேட்டு மிகவும் மகிழ்ந்தோம். நீ பூலோகத்திலே நம்மீது செய்த அதிசயபக்தி
யிலே தலைமை உடையனாய் இருக்கின்றாய், அதனாலே பவ்வியகுடாமணி எ
ன்றும், இப்பொழுது நமது சோதிரூபம் முழுதும் காணப்பெற்றாய், அதனா
லே முழுதுங்கண்டராமபாண்டியன் என்றும் பெயர் வழங்கப்பெறுவாய்.
இப்பொழுது நிகழ்ந்த பிரளயத்திலே இருபத்தொருபிரமர்கள் வந்து எமது தி
ருமேனிக்கு இருபத்தொருபீடம் சாத்தி அர்ச்சித்தார்கள். அதனை எவரும்
அறியும்படி நீ அவ்விருபத்தொருபீடமும் சாத்தினாய். பிரளயங்கடோறும் எ
ண்ணில்லாத பிரமர்கள் வந்து இந்தத்தானத்திலே நம்மைப் பூசிப்பார்கள். அ
தனாலே இது 'பிரமவிருந்தபுரம்' என்று பெயர்பெறும். நாம் இதுவரையும் இவ்
வேணுவனத்தில் மறைந்திருந்தோம். உலகத்திலே உனது அன்பின்பெரு
மையை எவர்களும் தெரியும்படி உனது பிரார்த்தனைக்கிரங்கி மேலெழுந்து
தோன்றினோம். இனிமேல் எந்தக்காலமும் நமக்குச் சுத்தமாகிய பால்கொண்
டு அபிடேகித்தல்வேண்டும். பாலபிடேகமே நமக்கு அதிகப்பிரியமாகிய சிற
ப்பாகும். இவ்வுண்மைகளையெல்லாம், தம்மையும் தமக்குப் பதியாகிய நம்மை
யும் அறியும் அறிவின்றி, வினைக்குத் தக்கபடி நாம் அளந்து கொடுப்பனவா
கிய செல்வம் வாழ்நாள் அநித்தியம் முதலியவைகளை தமது உடைமைப்பொரு
ள்கள் என்று கொள்ளவறியாது தம்முடையனவென்று விடாதமாகக் கொ
ண்டு, லோபமோகவைகிகளாகிச் செய்வன தவிர்வன அறிந்து ஒழுகும் ஒழு
க்கமுமின்றி, மோகம் மறைப்ப, வினைச்சுழலிற்பட்டு மாறாகின்ற பேதைமா
ரார் பிறர்போலாகாது, நீ பொருளியல்புகளை உள்ளவாறுணர்ந்து ஒழுகவல்ல
ஞானபக்குவனாய் இருத்தலால், உனக்குத் தெரிவித்தருளினோம். இனி இந்த
த்தானம் 'திருநெல்வேலி' என்னும்நகரமாகும். நீ மற்றெதைக்காட்டிலும் இந்
தத்தலத்திலே மிக்கஅன்புசெய்து நமக்குக் கோயில் அமைக்கக்கடவாய்" எ
ன்று கட்டளையிட்டுப், பின்னும், "பவ்வியகுடாமணியாகிய பாண்டியனே, உ
னது பக்தியும் தீரமும் நாம் கண்டு மகிழ்ந்து நீவேண்டிய வேண்டியவாறெ
ல்லாம் நாம் இசைந்து நிற்கும்படியான பெருஞ்சிறப்பைஅடைந்தாய். இ
ன்னும் விரும்பிய வரங்களையெல்லாம் பெற்றுக்கொள்ளக்கடவாய்" என்று
திருவாய்மலர்ந்தருளினார். இவையெல்லாம் முழுதுங்கண்டராமபாண்டியன்
கேட்டுப்பேரானந்தம் அடைந்து "கருணைக்கடலே, தேவரீர் இவ்வேணு

வனத்திலே நாயினேன்தரத்திலும் எளிவந்து திருமேனிதரித்தெழுந்தருளியும், தமியேனுக்கென்று வந்தபால் தேவரீருக்கு அபிடேகமாகும்படி ஒப்புக்கொண்டும், தமியேனது காம் பட்டமாத்திரத்தில் சொரிந்த இரத்தம் தடைப்படச்செய்தும், திருமேனிகாட்டியும், தமியேன் வேண்ட வளர்ந்தும், குறுகியும், அது பீடத்துக்கு உரிய அளவாக நிலைப்படச்செய்து நேரே காட்சிதந்தருளியும், இத்தனை உறுதிமொழிகளை உபதேசித்தும் என்றும் நீங்காத்துணையும் உற்ற உறவுமாய் நின்று இப்படியே பலவாற்றானும் அடியேனை உய்வித்தருளிய சுவாமீ, இவற்றைக்காட்டிலும் அடியேன் வேறு பெறத்தக்கவைகள் யாவை உள? இனி எந்நாளும் அடியேன் தேவரீரை மறவாத பேரன்பு பெறவும், இந்தத்தானத்திலே வேதவடிவாகிய இம்மூங்கில் ஒருபாற்பொருந்தத் தேவரீருக்கு ஆலயம் வகுக்கவும், இங்கேவந்து வழிபாடுசெய்வோர் அடைதற்கரிய தேவரீரது திருவடிநீழலை அடைந்து நீங்காத பெருவாழ்வு பெறவும் வரந்தரல்வேண்டும்" என்று விண்ணப்பஞ்செய்தான். சர்வாபீஷ்டவரதராகிய சிவபெருமான் "அவ்வாறு வரம் தந்தோம்" என்று இசைந்து, பின்னும் பாண்டியனை நோக்கி "அன்பனே, இனி நமக்குப் பாலபிடேகம் செய்யும்பொழுதெல்லாம் உனக்கு நமது திருக்கோலத்தைக்காட்டியருளுவோம். தரிசிக்கக்கடவாய்." என்று கட்டளையிட்டு, "இப்படியே உலகத்திலே அன்புடையார் எவராயினும் நமக்குப் பாலாட்டுஞ் சமயத்திலே நமது திருக்கோலத்தை தரிசிப்பார்கள். தமது பந்தம் நீங்கக்கருதி அன்புசெய்து நமக்குப் பாலபிடேகம் செய்வோர் நமது சொரூபத்தைப்பெற்று நித்தியானந்தத்தை அடைவர்கள்," என்று திருவாய்மலர்ந்து, அதனுண்மையை உடனே எவருக்கும் கண்கூடாகக் காட்டுமாறு திருவுள்ளங்கொண்டு, தமது சிரசின்மீது கோடாரிகொண்டு வெட்டிய பிழையைநோக்காது, நாடோறும் தமக்குப் பால்அபிடேகித்த பணியைநோக்கி ஆயர்தலைவனாகிய முழுதுங்கண்டராமக்கோனுக்கு உடனே விமானங்கொடுத்துத் தம்மை நீங்காத பெருவாழ்வுபெறும்படி சிவலோகத்திற்கனுப்பியருளினார். பிறர்க்கெல்லாம் கிடைக்காத சிவலோகவாழ்வு முழுதுங்கண்டராமக்கோனுக்கு உடனே கிடைத்ததனை நோக்கி, அரசன் முதலிய சகலரும் வியந்து வியந்து தொழுதுகொண்டு நிற்பக் கிருபாகராகிய ஸ்ரீ வேணுவனநாதர் தமது சோதிலிங்கத்திலே கலந்தருளினார்.

அரசன் தனக்குப் பேரருள்சுரந்த ஸ்ரீ வேணுவனநாதனைத் துதித்து வழிபட்டுக்கொண்டு, அங்குநின்றும் போந்து திருமூலட்டானேசுரனைத் தரிசித்து அவ்விருவருக்கும், அநவரததானநாயகருக்கும், ஸ்ரீகாந்திமதியம்மை



யாருக்கும் ஆலயமும், தூபியும், மண்டபங்களும், வேதிகைகளும், கோபுரங்களும், வாயில்களும், மதில்களும் சிவாகமவிதிப்படியே அமைத்துப், பரிவாரதேவதைகளுக்கும் உரியதானங்களிலே கோயில்கள் முடித்துப், பொற்றாமரை கருமாரி என்னும் புண்ணியவாவிகளுக்குப் படித்துறைகளும் அமைத்து, இப்படியே தெய்வத்தானங்களை முறைப்படி நிருமித்தான். நாற்றிசையிலும் வீதிகளும், மாடங்களும், தெற்றிகளும், கோபுரங்களும், மேடைகளும் வகுத்துத் துறவிகளுக்கும், கோயிற்றிருத்தொண்டு செய்கின்ற பரிசனங்களுக்கும் சிவகைங்கரியம் செய்கின்ற பக்தஜனங்களுக்கும், அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்னும் நாற்றிறத்துயர்குலத்தார்க்கும், மற்றச்சாதியார்களுக்கும் இயைந்த இயைந்தபடி வெவ்வேறிடங்கள் அமைத்து இந்தப்பிரகாரமாக யாவரும் பார்க்கும்படி நகரத்தை அழகுபெறச் செய்தான்.

இப்படியே நகரத்தைச்செய்து, முழுதுங்கண்ட பவ்வியசூடாமணிபாண்டியன் கற்றுவல்ல மேதாவியர்களிடத்தே சிவாகமவிதிகளைக் கேட்டுத் தெளிந்து ஆலயத்தில் விதிப்படியே நித்தியபூசை, நித்தியோற்சவம், வாரவுற்சவம், பக்கவுற்சவம், மாசவுற்சவம், வருடவுற்சவம் என்னுமிவைகளும் மற்றைக்கருமங்களுமாகிய சகல சிறப்புக்களும் நியமத்தோடு நடத்திப் பசுநிரைகளெல்லாம் சுவாமிக்கென்றே ஒப்பித்து உயிர்களுக்குக் கண்ணும் மனமும் போலத் தருமநெறிப்படி அரசுசெய்து வருவானாயினன்.

இவ்வுண்மைகளையெல்லாம் உணர்ந்து, ஸ்ரீராமர், மநு, மாந்தாதா, பூருவா, நளன், முசுகுந்தன், தருமன், இருடிகள் பன்னிருவர்கள் முதலிய பலரும் பலகாலங்களிலும் இவ்வேணுவனத்திலே வந்து வழிபாடுசெய்து வேண்டிய வரங்களைப் பெற்றார்கள்.

அருட்கவிகளாகிய இரட்டையர் பாடல்.

வேயீன்ற முத்தர்தமை வெட்டினனே யிடையன்
தாயீன்ற மேனி தயங்கவே—பேயாகேள்
எத்தனைநா ளென்றே யிடறுவார் பாற்குடத்தை
அத்தனையும் வேண்டு மவர்க்கு.

## ரு. திருநெல்வேலி.

ஆன்மாக்கண்மேற்கொண்ட பெருங்கருணையினாலே வேதவடிவாகிய மூங்கிலினிடத்து வேயின்றமுத்தராக வெளிப்பட்டருளிய வேண்டவளர்த்தமஹாலிங்கப்பெருமானுக்கு வழிபாடுசெய்து திருவருட்பேறு பெற்றோர்கள் எண்ணிறந்தோர்கள். பவ்வியசூடாமணியாகிய முழுதுங்கண்டராமபாண்டியன் செங்கோல்செலுத்திவரும் நாளிலே, உயிர்கள் செய்த வல்வினையினாலே இடையிலே பன்னிரண்டுவருடங்களாக மழைவருஷித்தலொழிந்துவிடக் குளங்கள், ஓடைகள், நதிகள், வாவிகளெல்லாம் நீர்வறப்ப, வளங்கள் சுருங்கி அகவிலை குறைந்தது. உயிர்களெல்லாம் பசியால் வருந்தின. ஒழுக்கங்களும், வைதிக சைவநெறிகளும், கட்டுப்பாடுகளும், மாதர் ஆடவர் தருமங்களும், நால்வரம்புகளும், தளர்ந்து நழுவியன. சனங்கள் பலரும் தூரதேசங்களிற்போய்த் திரிந்து வருந்தவும், பெற்றோர்கள் புத்திரர்களும், பெண்டிர் புருஷர்களும் ஒருவரையொருவர் முகம்பாராத வன்கண்மைபொருந்தவும் நேர்ந்தது. இப்படியே பலதுன்பங்களும் நிகழப் பன்னிரண்டுவருடங்களாகப் பஞ்சம் உண்டாயிற்று.

இதற்குமுன்னே, சித்தசுத்தியும், சிவபக்தியும், சிவோபாசனையும் பொருந்திய வேதசன்மா என்னும் ஆதிசைவர் ஒருவர் உத்தரதேசத்திலிருந்து தமது மனைவியாரோடு தக்ஷிணயாத்திரை செய்யப்புறப்பட்டு, வழியிலே அநேக சிவஸ்தலங்களைத் தரிசித்துக்கொண்டு, வேணுவனத்தின் கீழ்த்திசையிலுள்ள ராஜதானமாகிய மணவூரிலே வந்துசேர்ந்தார். சேர்ந்துவசிக்கும் நாளில், தம்மிடத்திலுள்ள பொருள் சுருங்கிவிட, ஒருநாள் உணவுக்கு வழியில்லாமல் மனைவிமக்கள் வாடுவது கண்டு, மனக்கவலைகொண்டு வேறுசெய்வதொன்றில்லாமல் உயிர்த்துணையாகிய பரமசிவத்தைத் தியானித்துக்கொண்டிருந்தார். அப்பொழுது திருவருளினாலே அவருக்கு நித்திரைவந்தது. அடியவர்குறைவுதீர்த்தாண்டருள்வதே விரதம்பூண்ட ஸ்ரீவேணுவனநாதர் ஒரு சிவயோகியார்போல அவரது சொப்பனத்தின்கண்ணே எழுந்தருளி "அன்பனே, உனது மனக்கவலையை ஒழி. இதுவரை நீ இங்கே இருந்தாய். இனி நமது பதியாகிய வேணுவனத்துக்கு வந்தால் உனக்கு வேண்டியசெல்வங்கள் தருவோம்." என்று அருளிச்செய்தார். உடனே வேதசன்மா நித்திரைவிட்டெழுந்து அதிசயித்து மகிழ்ந்து பசியால் வருந்திய தமது மனைவிமக்களோடு பொருநைநதியிலே சிந்துபூந்துறையில் வந்து தீர்த்தமாடி வேணுவனத்தில் வந்து ஸ்ரீவேணுவனநாதனையும், திருமூலட்டானேசுரனையும், அனவரததான



நாதனையும் தரிசித்து வடிவுடையம்மைகோயிலை அடைந்து அங்கே வழிபட்டு, மற்றைத் தேவர்களையும் வணங்கித் தோத்திரங்கள்செய்து முடித்து அநுமதி பெற்றுக்கொண்டு மணவூரிற்போயிருந்தார்.

ஸ்ரீவேணுவனநாதர் முன் உத்தரவுசெய்தபடியே வேதசன்மாவுக்கு அநேகவளங்களையும், செல்வங்களையும் வருவித்தருளினார். வேதசன்மா அவைகளைப்பெற்றுத் துன்பம் நீங்கி, நாடோறும் அன்றைக்கன்று செந்நெல் அறுத்து அரிசியாக்கி ஸ்ரீவேணுவனநாதருக்குத் திருவமுதமைத்து நிவேதித்துப் பூசித்துவருவார்.

இப்படி வருங்காலத்திலே மேலேசுட்டிய பஞ்சம் வந்து நேர்பட, வேதசன்மா அப்பொழுதும் பூசைக்கு முட்டுப்பாடின்றி நியமமாக நடத்தி வருவாராக, அவரது பத்திவலிமையை எவர்க்கும் தோற்றுவிக்கும்படி கடவுள் அவரது செல்வத்தைக் குறைத்துச் சோதித்தருளினார். வேதசன்மாவும் தமது நியமபூசைக்குப் பொருள்வரும்வழி ஒன்றுமின்றி வருந்திச் சுவாமி சந்நிதானத்திலேவந்து, "மழைபொழிவதும் இக்கொடியபஞ்சம் தொலைவதும் என்றோ" என்று தமது குறையைவிண்ணப்பஞ்செய்து, தாம் யாசித்துக்கொண்டுவந்த செந்நெல்லைச் சுவாமி சந்நிதானத்திலே உலரப்போட்டுவிட்டுக் "காலம் கொடிதாயிற்றே" என்று நைந்துகொண்டு, பொருநைநதியிற்போய்ச் சிந்துபூந்துறையிலே தீர்த்தமாடிச் சந்தியாவந்தனம் முடித்துக்கொண்டு, பூங்குடலையைக் கையிற்பூட்டித் திருமஞ்சனமும் எடுத்துக்கொண்டு விரைந்து வழிக்கொண்டுவந்தார்.

வரும்பொழுது, வேதசன்மாவினது கவலையையும் உயிர்கள் படுந்துயரத்தையும் ஒழிக்கத் திருவுள்ளங்கொண்ட ஸ்ரீ வேணுவனநாதர் திருவருளினாலே, வானமும் பூமியும் இருள்படும்படி எங்கும் மேகங்கள் பரந்து மழைபொழிந்தன. பிரவாகம் மிகுதியாயிற்று. அப்பொழுது வேதசன்மா மழைபொழிவதும், வெள்ளம் பரந்ததும் நோக்கி, "இம்மழைவெள்ளம் பெரிதாயிற்றே. சுவாமிக்கு உலரப்போட்டநெல்லை முன்னே வாரிக்கொண்டுபோய்விடுமே. வேறுநெல்லும் கிடையாதே! சுவாமி பசித்திருப்பாரோ! ஏழையேன் யாதுசெய்வேன். விதிவசமிப்படியா" என்று கரைந்து அழுதுகொண்டுவருவார். பின்பு, "அன்பர்க்கருளுகின்ற பரமசிவன் தமக்குத் திருவமுதுக்கென்று தம்முன்னேவைத்தநெல்லை வெள்ளம் எடாதபடி காத்தருளுவார்" என்று நினைந்து மகிழ்ச்சியும் அடைவார். இப்படியே வருந்தியும் மகிழ்ந்தும் தனியே வழிக்கொண்டுவருகின்ற வேதசன்மா ஆலயத்திலே புகுந்து, மழை

வெள்ளமானது தாம் போட்ட நெல்லை வாரிக்கொண்டுபோகாது அதனைச்சூழ்ந்து உயர்ந்த வேலியாய் அமைந்து நிற்றலைக்கண்டார். அப்பொழுது எங்கும் எறிக்காத வெய்யில் மத்தியிலே அந்நெல்லின்மேல் நின்று எறித்தலும் கண்டார். நெல்லு நனையாது உலர்ந்திருத்தலும் கண்டார். "இப்படியும் உண்டோ திருவருள்!" என்று ஆடிப் பாடித் தருக்கி இவ்வதிசயத்தைப் பாண்டியன் முன் ஓடிவந்து தெரிவிப்ப, உடனே பாண்டியராசன் ஆலயத்திலேவந்து எங்குங்காணாத பேரற்புதமாகிய அதனைக்கண்டு பேராச்சரியம் அடைந்து "எம்பெருமானே, தேவரீர் உபகாரத்தை மறந்து வேண்டியவாறு ஒழுகுகின்ற பாவிகளாகிய நம்மை உய்விக்கவேண்டித் தாங்கலாற்றாத கொடிய பஞ்சத்தை வருவித்தும், அதனால் வருந்தி எமது துயரத்தைக்கண்டு பாதுகாக்கவேண்டி மழைபொழிவித்தும் வேதசன்மா உலரப்போட்ட நெல்லை வெள்ளம் நனைத்து அள்ளிக்கொண்டுபோகாதபடி பாதுகாத்து அவ்வெள்ளத்தையே நெல்லுக்கு வேலியாக அமைத்தருளினீர். தேவரீரது அனந்தானந்தமாகிய திருவிளையாடல்களை யாவரறிந்து சொல்லவல்லவர்கள். இந்தத்திருவிளையாடலினாலே தேவரீருக்கு நெல்வேலிநாதர் என்று பெயர் வழங்குவித்தருளுக" என்று விண்ணப்பஞ்செய்தான். அப்பொழுது விண்ணோர்களெல்லாம் மலர்மழை பொழிந்தார்கள். வானதுந்துபிகளும் வாத்தியங்களும் கோஷித்தன. சிவனடியார்களெல்லாம் வழிபட்டு நெல்வேலிநாதர் என்னும் திருநாமத்தைப் பலமுறை எடுத்துச்சொல்லித் தோத்திரஞ்செய்து மகிழ்ந்தார்கள். உலகமுழுதும் குதூகலமடைந்தது. அரசன் சுவாமி சன்னிதானத்திலே வணங்கித் துதித்து ஸ்ரீ காந்திமதியம்மையாரையும் வழிபட்டுப் பேறு பெற்று மகிழ்ந்தான்.

பரானந்தபரவசராகிய வேதசன்மா தனக்கருள்செய்த ஸ்ரீ வேணுவனநாதர் சன்னிதானத்திலே நமஸ்கரித்து எழுந்து "எல்லாம்வல்ல சுவாமீ, தேவரீர் முன்னே இகல் கருதி மலர்ப்பாணம் தொடுத்த மன்மதனை நெற்றிக்கண்ணக்கினியினால் தகித்த காலத்தில் தனித்தங்கம் சாம்பலாகி அவன் இறந்துவிட அவனோடு நின்ற அற்பதோஷியாகிய இரதியை அங்கம்வெந்து இறந்துபோகாதபடி தீ அணுகவொட்டாது காத்தருளினீரன்றோ? அதுபோல இன்று தமியேனளவினுமிரங்கி வெள்ளமானது எப்பொருள்களையும் வாரிக்கொண்டுபோமியல்பினதாகவும் நெல்லை அப்படிச் செய்யாது அவ்வெள்ளமே வேலியாம்படி பாதுகாத்தருளினீர். அதுசெய்த உமக்கு இஃதென்னை புதுமையோ" என்று துதித்து அந்நெல்லை அரிசியாக்கித்திருவமுது அமைத்து அதற்கு இயைந்த கறியமுதுகளமைத்து வடிவுடையம்மையோடு திருநெல்வே



லிநாதருக்கு நிவேதனம் செய்வித்துத் தீபாராதனம்செய்து வணங்கித் துதித்து மகிழ்ந்தான். இப்படியே வேதசன்மா நாடோறும் ஸ்ரீ வேணுவனநாதரை நெடுங்காலம் பூசைசெய்து அவரது திருவடிநிழலிலே சேர்ந்து நித்தியானந்தமடைந்தார்.

மேற்சொல்லியவாறே மழை மிகுதியாகப்பொழிந்து பொருநைநதி பெருகி, நீர்நிலைகள் நிறைந்து தானியங்கள் விருத்தியாக எல்லாரும் எல்லாப்பொருள்களும் பெற்று இன்பமனுபவித்துவாழ்ந்தார்கள். தானமும் தவமும் மற்றைத்தருமங்களும் அபிவிருத்தியாயின. வருணாச்சிரம வொழுக்கங்கள் நிலைபெற்றன. உலகஞ்செழித்தது.

முன்னே ஸ்ரீ வேணுவனநாதர் முழுதுங்கண்ட ராமபாண்டியனுக்கு அருளிச்செய்தபிரகாரம் நெல்லுக்கு நீரை வேலியிட்டுக்காத்தமையினால் வேணுவனம் எந்நாளும் திருநெல்வேலி என்று வழங்கப்பெற்றது.

பவ்விய சூடாமணியாகிய முழுதுங்கண்ட ராமபாண்டியன் வேணுவனநாதராகிய ஸ்ரீ சாலிவாடிபுரேசுரருக்கும் காந்திமதியம்மையாருக்கும் உவந்த பணியும் வழிபாடுமுடையனாயொழுகி உயிர்கள் இன்புறும்படி நெடுங்காலம் அரசுசெய்துவாழ்ந்து திருவருளினாலே ஸ்ரீ சாலிவாடிபுரேசுரரது திருவடி நிழலிலே சேர்ந்து நித்தியாநந்தம் அடைந்தான்.

பின் அவனது புதல்வனாகிய ஈசானபாண்டியன், அவனது வமிசத்தில் சூடாமணிபாண்டியன், அவனது புத்திரனாகிய இராஜசூடாமணிபாண்டியன் முதலியோர் அளவிறந்தோர்கள் வந்து அவரவர்காலத்திலே செங்கோல்செலுத்தி அரசுவீற்றிருந்து ஸ்ரீ சாலிவாடிபுரேசுரருக்கும் காந்திமதியம்மையாருக்கும் உரிய பணிகளுஞ்செய்து திருவருள்பெற்று உய்ந்தார்கள்.

திருச்சிற்றம்பலம்.

தேவாரம்.

பைங்கண்வா ளரவணை யவனொடு பனிமல ரோனுங்காணா
வங்கணா வருளென வவருவர் முறைமுறை யிறைஞ்சநின்றார்
சங்கநான் மறையவர் நிறைதர வரிவைய ராடல்பேணத்
திங்கணாள் விழமல்கு திருநெல்வே லியுறை செல்வர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

## ஸ்ரீவேணுவன லிங்கோற்பவம்.

முற்றிற்று.

மெய்கண்டதேசிகன் திருவடிவாழ்க.

அருண்மொழித்தேவ னடியிணை பரசுதும்
கருவொழித்தின்பக் கதிபெறற் பொருட்டே.

திருச்சிற்றம்பலம்.